5th February 1959]

*Amount spent for education out of temple funds*

* 38 *Q.*—Sri C. MUTHIAH : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

1957–58-ல் தர்ம பரிபாலன இலாகாவிலிருந்து கல்விக்காக தொகை மாகாணத்தில் எத்தனை இடங்களில் செலவு செய்யப்பட்டது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : No fund was allotted for the purpose by the Hindu Religious and Charitable Endowments (Administration) Department. The Honourable Member apparently refers to the religious institutions from which funds were diverted for educational purposes. If so, in three places, surplus funds of religious institutions, were diverted for educational purposes.

Sri K. B. S. MANI : அரசாங்கத்திற்கு அதிகமான தொந்தரவு கொடுக்காமலேயே திருப்பனந்தாள் மடத்திலிருந்து அப்பகுதியில் இருக்கும் தனியார் துறை பள்ளிக்கூடங்களை எடுத்து நடத்துவதற்கு கேட்டபோது தனியார்கள் மறுத்துவிட்டார்கள். இம்மாதிரி மறுத்துவிட்ட விபரம் அரசாங்கத்திற்குத் தெரியுமா ? தெரியுமென்றால் இம்மாதிரி மடாலயங்கள் கோருகிறபடி தனியார் பள்ளிகளை நல்ல முறையில் நடத்துவதற்கு மடாலயங்களின் கீழ் ஒப்படைக்க சர்க்கார் முயற்சி செய்யுமா ?

The. Hon Sri M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி அரசாங்கத்தினிடத்தில் தகவல் இல்லை. கூடுதல் தகவல்களை கனம் அங்கத்தினர் அவர்கள் கொடுத்தால் அதைப் பற்றி பரிசீலிக்கலாம்.

Sri M. C. MUTHIAH : உயர்நிலை பள்ளிகளில் பிரார்த்தனை மண்டபம் கட்டவேண்டுமென்று கோரிக்கைகள் வந்தால் ஆங்காங்கு இருக்கும் மடாலயங்கள்- மூலமாக அந்த பிராத்தனை மண்டபங்களை [கட்டிக்கொடுக்க அரசாங்கம் முயற்சி எடுக்குமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : அம்மாதிரி சில யோசனைகள் இருந்து வருகின்றன. சில தேவைகள் இம்மாதிரி அங்கீகரிக்கப்பட்டும் வருகின்றன.

Sri K. R. VISWANATHAM : தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கூறின எஞ்சிய பணத்திலிருந்து செலவு செய்த மூன்று இடங்கள் எவையெல்லாம் என்று அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri M. BHAKTAVATSALAM : ஒன்று மணலி லட்சுமண முதலியார் ஸ்பெஸிபிக் என்டோமெண்ட்ஸ் தொகையிலிருந்து சென்னை தியாகராஜா காலேஜில் ஒரு பிரார்த்தனை மண்டபத்திற்காக 10 ஆயிரம் ரூபாய் கொடுக்கப்பட்டது. இரண்டு : திருச்செந்தூர் சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானத்திலிருந்து அங்குள்ள போர்டு ஹைஸ்கூலுக்கு பகல் உணவிற்காக 200 ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. மூன்று : சங்கரநயினார் கோவில், சங்கர நாராயணசுவாமி கோவில் தேவஸ்தானத்திலிருந்து அங்குள்ள கோமதி அம்மாள் போர்டு ஹைஸ்கூலுக்கு பகல் உணவிற்காக 303 ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது.

Sri A. VEDARATHNAM : பல தேவஸ்தானங்களிலும் கல்விக்காக பணம் ஒதுக்குவதற்கு அவர்களுக்கு உத்தரவில்லை என்றும், அதற்காக சட்டம் இல்லை என்றும் கூறுகிறார்கள். ஆகவே அம்மாதிரி தேவஸ்தான உபரி நிதியிலிருந்து கல்விக்கு ஒதுக்குவதற்கு அரசாங்கம் ஏதாவது ஏற்பாடு செய்யுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : பொதுவாக எல்லா இடங்களிலும் கல்விக்காக மட்டும் ஒதுக்கப்படுவதில்லை. ஆனால் சில இடங்களில் கல்விக்காக ஒதுக்கப்பட்டும் வருகிறது. இதைப்பற்றி ஆலோசித்து

சட்டம் திருத்தப்பட்டு வருகிறது. அவ்விதம் திருத்தப்பட்ட மசோதாவை இந்த சட்ட மன்றத்தில் கூடிய சீக்கிரம் சமர்ப்பிக்கலாம் என்று நினைக்கிறேன்.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : ஸார், திருப்பனந்தாள், பந்தநல்லூர் கிராமங்கள் தேவஸ்தான கிராமங்களாக இருப்பதினால், அந்த கிராமங்களில் தேவஸ்தான ரிஸர்வ் நிதியிலிருந்து ஹைஸ்கூல்கள் ஏற்படுத்த வேண்டுமென்று அரசாங்கத்திற்கும் தேவஸ்தானங்களுக்கும் பல விண்ணப்பங்கள் அனுப்பியும் அவை கவனிக்கப்படாமல் இருந்து வருகின்றன ஆகவே அந்த இடங்களில் உடனடியாக இந்த நிதியிலிருந்து ஹைஸ்கூல்கள் ஏற்படுத்த அரசாங்கம் முன் வருமா என்பதை அறிய வேண்டுகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி அவர்களைக் கட்டாயப் படுத்த முடியாது.

*Punka-pullers*

* 39 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state the reason for keeping punka-pullers in Government service?

THE HON. SRI C. SUBRAMANIAM : Punka-pullers are employed for pulling punkas in a few Government offices which have not yet been electrified and housed in buildings which are not airy and well ventilated.

SRI N. K. PALANISAMI : ஸார், இன்னும் சில இடங்களில் அதாவது எலக்ரிஸிட்டி இல்லாத இடங்களில் பங்கா இழுப்பவர்கள் இருந்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே இந்த இடங்களிலும் எலக்ரிஸிட்டி போடுவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : போட்டுக்கொண்டுதான் இருக்கிறோம்.

*Retrenchment in the Commercial Taxes Department*

* 40. Q.—SRI M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Industries be pleased to state the number of Last Grade Servants of the Commercial Taxes Department who have been recently thrown out of employment on account of retrenchment measures in the departments?

THE HON. SRI R. VENKATARAMAN : 205 Last Grade servants were retrenched due to the re-organisation of the commercial Taxes Department with effect from 1st October 1958.

SRI M. S. SELVARAJAN : ஸார், இதுவரை மாற்றுவேலை எத்தனை பேர்களுக்கு கொடுக்கப்பட்டது. இன்னும் கொடுக்கப்படாமல் இருக்கும் ஆட்களுக்கு வேலை கொடுக்க இன்னும் எத்தனை காலம் ஆகும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : டிசம்பர் மாதம் 1-ம் தேதி வரை 104 பேர்களுக்கு பெர்மனண்டாகவும், 23 பேர்களுக்கு டெம்பரரியாகவும் வேலை கொடுக்கப்பட்டிருக்கிறது. மீதியுள்ள 78 பேர்களுக்கும் சீக்கிரமாகவே வேலை கொடுக்கப்படும்.